# கீதா சாரத் தாலாட்டு,

குறிப் புரை யுடன்



अहं ब्रह्मास्मि

अयमात्मा ब्रह्म



प्रज्ञानं ब्रह्म

तत्वमसि

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,

..., திருப் பூ வணம்.

ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ।
जीवन्मुक्तस्तु तद्विद्वानिति वेदान्त डिण्डिमः ॥

---

कामक्रोधश्च लोभश्च देहे तिष्ठन्ति तस्कराः ।
ज्ञानरत्नापहाराय तस्मात् जाग्रथ जाग्रथ ॥
जन्मदुक्खं जरादुक्खं जायादुक्खं पुनःपुनः ।
संसारसागरं दुक्खं तस्मात् जाग्रथ जाग्रथ ॥
माता नास्ति पिता नास्ति नास्ति बंधुस्सहोदरः ।
अर्थं नास्ति गृहं नास्ति तस्मात् जाग्रथ जाग्रथ ॥
आशया बद्धते लोके कर्मणा बहुचिंतया ।
आयुस्क्षीणं न जानाति तस्मात् जाग्रथ जाग्रथ ॥

8-1

ஓம் தத் சத்

பரப் பிரஹ்மணே நம:

திரு வாமாத் தூர்

ஸ்ரீ திரு வேங்கட நாதர் அவர்கள் இயற்றிய

# கீதா சாரத் தாலாட்டு.

குறிப் புரையுடன்.



உரை ஆசிரியர்

ஸ்ரீலஸ்ரீ

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

திருப் பூ வணம்.

அண்ணலார் அன்னையார்களின் விருப்பப்படி

திருப் பூ வண மடத்து

சிவ மயம்.

# முக உரை.

---

இந் நில வுலகத்தில் எழு வித மான பிறவிகளில் மாநுடப் பிறவி மேன்மை யுடைய தாம். அவ் வாறு மாநுடராய்ப் பிறந்த ஆண் பெண் இரு பாலாரும், தமக்கு உறுதிப் பய னாகிய மோக்ஷத் தை அடைவதே பிறப்பின் பய னும். அந்த மோக்ஷத்திற்குக் கர்மம் பக்தி ஞாநம் என்று மூன்று சாதநங்கள் நூற்களில் கூறப்படுகின் றன. அதனை விளக்க, பகவான் பாரதத்தில், (700) எழு நூறு சுலோக மாகப் பகவற் கீதை என் னும் பெயரால், அர்ஜுநனை நிமித்த மாகக் கொண்டு உலகினர் யாவருக்கும் பயன்படும்படி யாக, ஒரு நூல் அமைத்து வைத்திருக்கின் றனர். அந்தப் பகவற் கீதை எழு நூறு சுலோகங்களும், உலகத்தில் உள்ள சகல பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு, சகல தேயத்தவரும் அதன் பொருளை உணர்ந்து, ஆத்ம ஞாநிகள் ஆகி வருகின் றனர் என்பது உலகப் பிரசித்த மான விஷயம்.



அந்தப் பகவற் கீதை எழு நூறு சுலோகங் களையும் தமிழில் வசந வடிவ மாகவும், செய்யுள் வடிவ மாகவும், பலர் மொழி பெயர்த்திருக் கின் றனர். அவற்றுள், சேம நகர் பட்டரால் (545) செய்யுள் ரூப மாக மொழி பெயர்த்த பாமார்த்த தரிசநம் என்னும் பகவற் கீதையும் ஒன் றாம். இதனை மூல மாகக் கொண்டு, திரு வா மாத் தூர் என்னும் ஊரில் எழுந்தருளி யிருந்த திரு வேங்கட நாதர் என்னும் வித்வத் சிரேஷ் டர், கர்மம் பக்திகளை விட்டுச் சார மான ஞாந அர்த்தத்தினை மாத்திரம் மந்த மதியினரும் உணர்ந்து, மோக்ஷம் அடைய வேண்டும் என் னும் அவா மேலீட்டால், பால கிருஷ்ணனைத் தொட்டிலில் இட்டுத் தா லாட்டுவது போன்று, தாலாட்டுப் பிரபந்த மாக 104 செய்யுட்களில், இயற்றிப், பகவற் கீதா சாரத் தாலாட்டு என் னும் பெயரை, முதற் குறை யாகக் கீதா சாரத் தாலாட்டு எனப் பெயர் ஈந்து தம் மகவு இடம் கொடுத்தனர்.

இக் கீதா சாரத் தாலாட்டு என்னும் நூல், ஞாந அர்த்தங்கள் பலவற்றையும் ஒருங்கே

திரட்டி, அர்ஜுநன் சங்கையும், கிருஷ்ண பரமாத்மா சமாதானமும் கூறும் வாயிலாக ஆரம்பிக்கப்படுகின்றது. ஆத்ம அநாத்ம பதார்த்தங்களின் இயல்புகளை அதிகப் பிரயாசம் இன்றி அறியும்படி செய்வது. மதாலசா என்னும் பெண்மணி தன் பிள்ளைகளைத் தொட்டிலிலியே ஞாநிகள் ஆக்கியது போன்று, பாலப் பருவத்திலேயே. மாதாவின் உபதேசத்தால் ஞாநி ஆக்க வல்லது. புத்திக் கூர்மை யில்லாத பெண்களும், ஆண்களும், ஆத்ம தத்துவத்தினை அறியும்படி முன்னிலைப்படுத்திக் கூறுவது.

இவ் விதப் பெருமை வாய்ந்த கீதா சாரத் தாலாட்டு என்னும் நூலுக்கு "லகு சந்திரிகை" என நாம் ஓர் உரை யியற்றி யிருக்கின்றோம். இது இன்னும் வேறு ஓர் குறிப் புரை உடன் வெளிவரின், ஆண் பெண்பாலார் பலருக்கும் உபயோகம் ஆகும் எனக் கருதி, எனது நண்பர் பலர் கேட்டுக்கொண்டபடி இந்தக் குறிப் புரையை இயற்றி முற்றுவித்தனம்.

**காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,**

சர்வதாரிஹு மாசி மாதம். திருப் பூ வணம்.

உ

சிவ மயம்.

ஓம் தத் சத்.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகாய நம:

# கீதா சாரத் தாலாட்டும், குறிப் புரையும்.

மாதையர்கோன் வேதாவில் வாய்வேங் கடநாதன், காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணன் அருள் - கீதைக், கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாருங், கருத்துயர்தீர்ந் தெய்தக்க தி.

(குறிப்பு உரை) மாதையர் கோன் - திரு ஆமாத்தூருக்குத் தலைவன், கீதை கருத்து - (பகவற்) கீதையின் தாத்பர்யத்தை, உயர் தாலாட்டு ஆக - தாலாட்டுப் பிரபந்த மாக, வேங்கட நாதன் கட்டுரைத்தான் - திரு வேங்கட நாதன் கூறினன், எ-று.

ஐவகைப் பொருளு நான்கு காணமுங் குணங்கண் மூன்றுஞ், செய்வினை இரண்டும் ஒன்றி

யாவருந் திகைப்ப நின்ற, பொய்இருள் அகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள், கைவளர் ஆழிச் செங்கட் கண்ணனைக் கருத்தில் வைப்பாம்.

(கு-ரை) ஐ வகைப் பொருளும், நான்கு கரணமும், குணங்கள் மூன்றும், வினை இரண்டும், ஆக, ஒன்றி - பொருந்தியிருக்கின்ற, பொய் இருள் - பொய்யான அஞ்ஞான இருட்டு, ஞான பொருள் கதிர் விரித்த புத்தேள் - ஞான அர்த்தம் ஆகிய கிரணங்களைப் பரப்பிய ஞான சூரியன், ஆழி செம் கண் கண்ணனை - சக்கரத்தினையும் சிவந்த கண்ணையும் உடைய கிருஷ்ண பரமாத்மாவை, எ-று.

சீராரும் பரமார்த்த தெரிசநத்தை அருள் செய்யப், பேராருந் தேசிகனாய்ப் பெருமானே வந்தவரோ. 1

(கு-ரை) பரமார்த்த தெரிசநத்தை - (தமிழ் செய்யுள் ரூப) பரமார்த்த தெரிசநம் என்னும் நூலை, அல்லது, யதார்த்த ஞாநத்தை, பேர்



ஆரும் தேசிகன் ஆய் - பெருமை பொருந்திய ஆசாரிய ராக, எ-று.

திருத்தேரிற் சாரதியாயச் சேர்ந்திருந்துங் கீதையினால், அருச்சுநர்க்கு மெய்ஞ்ஞாநம் அனைத்தும்உரை செய்தவரோ. 2

(கு-ரை) தேரில் சாரதி ஆய் சேர்ந்திருந்தும் - தேரில் பாகனாகப் பொருந்தியிருந்தும், கீதையினால் - (தமது) வாக்கால், ஞாநம் அனைத்தும் - ஞாநம் (ஞாந சாதநங்கள்) யாவும், எ-று.

செஞ்சமரிற் பந்துசநச் சேதம்வரும் என்றிரங்கி, அஞ்சினவன் பயந்தீர்த்தே அமர்செய்யச் சொன்னவரோ. 3

(கு-ரை) செம் சமரில் - நியாய மாகச் செய்கின்ற (ஸ்வ தர்ம மான) யுத்தத்தில், பந்து சநச் சேதம் - உறவினர்க்கும் ஜநங்கட்கும் நாசம், அஞ்சினவன் - பயந்த அருச்சுநன், பயம் தீர்த்து - அச்சத்தை (கர்மம் பக்தி ஞாந காண்டங்களினால்) நீக்கி, அமர் - யுத்தத்தை, எ-று.

சுற்றம்அறிற் சோகம்எனச் சொல்லினைசற் றறிந்தவன்போற், கற்றுணர்ந்த பேர்அதனுற் கலங்கார்காண் என்றவரோ. 4

(கு-ரை) சுற்றம் அறில் சோகம் என சற்று அறிந்தவன் போல் சொல்லினை - சுற்றத்தவர்கள் நாசம் அடையின் துக்கம் உண்டாம் என்று சில நூற் பொருள் உணர்ந்தவனைப் போல் கூறுகின் றனை, அதனுல் - (சுற்றத்தவர்கள் நாசம்) அடை வதனுல், கற்று உணர்ந்த பேர் - அத்யாத்ம வித்துவான்கள், காண் - முன் னிலை அசை, எ-று.

கலங்காரோ இறப்புவரிற் கற்றுணர்ந்த பேரோ னும், மலங்காமல் நான்இருக்கும் வகைஉரையும் எனவினவ. 5

(கு-ரை) கற்று உணர்ந்த பேரேனும் இறப்பு வரில் கலங்காரோ - அத்யாத்ம வித்துவான்க ளாக இருப்பினும் மரணம் வந்தால் மயங்க மாட்டார்களா, நான் மலங்காமல் இருக்கும் வகை உரையும் - நானும் கலங்காமல் இருக்கும் படியான உபாயத்தினை உபதேசம் செய்யும், எ-று.



நீயுநா னும்புவிமேல் நிருபர்களும் மெய்உணர் வால், ஆயுங்காற் பிறந்திறப்ப தார்க்கும்இலை என்றவரோ. 6

(கு-ரை) மெய் உணர்வால் ஆயுங்கால் - உண் மை ஞானத்தினுல் விசாரிக்குமிடத்து, நீயும் நானும் புவி மேல் நிருபர்களும் ஆர்க்கும் பிறந்து இறப்பது இலை - (அருச்சுந ஞகிய) நீயும், (பகவா ஞகிய) நானும், பூமியில் உள்ள அரசர்களும், ஏனைய ஜநங்களும், ஜநிப்பதும், மரிப்பதும், இல்லை. எ-று.

ஈங்கெவர்க்கும் பிறந்திறப்ப தில்லைஎன்றீர் இவ்வுலகில், நீங்குபவம் ஆர்க்கிதனை நிச்சயமாய்ச் சொல்லும் என. 7

(கு-ரை) ஈங்கு எவர்க்கும் பிறந்து இறப்பது இல்லை என்றீர் - இவ் வுலகத்தில் எந்த ஜீவனும் பிறப்பதும், இறப்பதும், இல்லை என்று கூறினீர், ஆர்க்கு பவம் நீங்கு - யாவர்க்கு பிறப்பும் இறப் பும், இதனை நிச்சயம் ஆய் சொல்லும் என. எ-று.

இத்தரையிற் பிறந்திறப்ப தெடுத்தவுடற் கடுத்த பொறி, நித்தியமா கியஆன்மா நின்சொரூபம் என்றவரோ. 8

(கு-ரை) இ தரையில் எடுத்த உடற்கு அடுத்த பொறி பிறந்து இறப்பது - இந்தப் பூமியில் (கர்மத்திற்குத் தக்கபடி) எடுத்த உடம்பிற்கு பொருந்திய தர்மம் பிறப்பதும் இறப்பதும் ஆகும். நின் சொரூபம் நித்தியம் ஆகிய ஆன்மா என்ற வரோ. எ-று.

அங்கம்உயிர் இந்தியநான் அன்றிவே றெனைக் காணேன், இங்குயான் வேறுண்டேல் எனக் கறியப் புகலும்என. 9

(கு-ரை) நான் அங்கம் உயிர் இந்தியம் அன்றி எனை வேறு காணேன் - நான் (என்பதாக) உடம்பு உயிர் இந்திரியங்களே காணப்படுகின்றன அல்லாமல், நான் என்பதனை (இவற்றிற்கு) வேறாக காண்கிலேன். இங்கு யான் வேறு உண்டேல் எனக்கு அறிய புகலும் என - இந்தச் சரீரத்தில் (தூல சூக்ஷ்ம சரீரங்கட்கு) அந்நிய மாக நான் என்னும் சொல் பொருள் இருக்குமாயின், எ-று.



மெய்உயிர்இந் தியங்கள்அல்லால் வேறறியேன் என்றவனைப், பையஅவை யால்அறிப் படானுநீ என்றவரோ. 10

(கு-ரை) மெய் உயிர் இந்தியங்கள் அல்லால் வேறு அறியேன் என்றவனை பைய அவையால் அறியப்படானும் நீ என்றவரோ - (தூல சூக்ஷ்ம) உடம்புகளே நான் என்னும் சொல் பொருளாக விளங்குகின்றதே அல்லாமல், (ஈர் உடம்புக்கு) வேறாக (நான் என்னும் சொற் பொருளை) உணர்ந்திலேன் என்று கூறிய அருச்சுனனைப் பார்த்து, குழந்தாய் அவற்றால் அறியப்படாதவனும், அவற்றை அறிபவனும், உனது ஸ்வரூபமாம். எ-று.

தேகம்வே றாகில்அதைச் சேர்ந்ததிவண் எதெனவே, சோகமே விளைகருமத் தொடர்ச்சியினால் என்றவரோ. 11

(கு-ரை) தேகம் வேறு ஆகில் - சரீரம் வேறாக இருக்குமானால், அதை - அந்தத் தேகத்தை, எ-று.

தேகம்எடா முன்கருமச் செயல்வருமா றே தெனவே, ஏகமாம் மாமும்வித்தும் எனும் முறைபோல் என்றவரோ. 12

(கு-ரை) மரமும் வித்தும் எனும் முறை போல் - பீஜ அங்குர நியாயம் போல, கர்மத்தி ஞல் சரீரமும், சரீரத்தால் கருமமும் எனச் சக்கரம் போல் மாறி மாறி வருவது ஆம். எ-று.

இதனை பீஜ (வித்து) அங்குர (மரம்) நியாயம் என்பர்.

காயமுந்தா னும்பிறிதேற் கன்மம்எவர் செய்த தெனத், தீயவுடற் கலதுகன்மச் செயறனக்கே தென்றவரோ. 13

(கு-ரை) தானும் - ஆத்மாவும், பிறிதேல் - வேறு வே ருக இருக்குமாயின், தனக்கு - ஆத்மா விற்கு, ஏது - இல்லை. எ-று.

படர்கருமம் உடல்செய்யிற் பலம்உறுவ தார்க் கெனவே, அடர்பலமும் உடற்கேயாம் அறிவார்க் கே தென்றவரோ. 14



(கு-ரை) பலம் உறுவது ஆர்க்கு - யாவரை? ஆத்மாவினையா? உடம்பினையா?, எ-று.

வெய்யவினை உடற்கென்ருல் மெய்இங்கே விழ ஆந்மா, ஐயம்அற நரகசொர்க்கம் அநுபவிப்ப தேதெனவே. 15

(கு-ரை) ஐயம் அற நரக சொர்க்கம் ஆந்மா அநுபவிப்பது - சந்தேகம் இன்றி, ஸ்வர்க்க நரகங்களை ஆத்மா அநுபவிப்பது, ஏது - எக் காரணத்தினுல்? எ-று.

அநுபவமே இலேயதுவீண் ஆரோபி தநிகழ்த் தில், தநுகாணச் செயறனதாச் சார்வதுபோல் என்றவரோ. 16

(கு-ரை) அது - அவ் வாறு கூறுவது, எ-று.

மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்கம் ஏதெனவே, முற்றுணர்வொன் றில்லாத மோகம் என்று சொன்னவரோ. 17

(கு-ரை) முற்று உணர்வு ஒன்றில்லாத மோ கம் - பூரண மான ஞானத்தினை அடையாத மயக் கத்தினுல், எ-று.

அறிவுதே கந்தனக்கோ ஆன்மாவிற் கோஎன வே, பிறிவுசெயில் அசித்துடலம் பிரமம்அறி வென்றவரோ. 18

(கு-ரை) அறிவு - ஞானம், உடலம் அசித்து - சரீரம் ஜடம், எ-று.

தேகம்அசித் தாகில்இந்தச் செயல்வருவ தே தெனவே, ஏகபரஞ் சோதியின்முன் இருக்கை யினல் என்றவரோ. 19

(கு-ரை) இந்தச் செயல் - (சரீரத்திற்குக் கர்மங்களைச் செய்யும்படி யான) இத் தொழில்கள், வருவது - வந்து பொருந்துவது, எ-று.

இருக்கினும்அ சேதநத்துக் கிச்செயல்உண் டோஎனவே, உருக்குபடாக் காந்தமுன்னில் ஊசிநிகர் என்றவரோ. 20

(கு-ரை) காந்த முன்னில் ஊசி நிகர் - காந்த சந்நிதானத்தில் ஊசி (சேட்டித்திடுதல்) போலும்,

இதனை சூசி (ஊசி) காந்த (காந்தம்) நியாயம் என்பர். எ-று.



சொன்னசெயல் உடற்காளுற் சுகதுக்கம் இயார்க்கெனவே, அன்னசுக துக்கமுந்தான் அவ்வுடற்கே என்றவரோ. 21

(கு-ரை) சுக துக்கம் யார்க்கு - யாவருக்கு, அவ் உடற்கே - அந்தச் சரீரத்திற்கே, எ-று.

சேதநமாம் ஆன்மாவைச் சோராத துக்கசுகம், ஓதுசட மாம்உடலை உற்றிடுமோ சொல்லும் என. 22

(கு-ரை) சடம் ஆம் உடலை உற்றிடுமோ - அறிவு இன்றிய தாகிய சரீரத்தினைப் பொருந்துமா? எ-று.

பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள்பத்து மநமுதனுன், ஈதிருமெய் இதின்மநத்துக் கின்ப துன்பம் என்றவரோ. 23

(கு-ரை) ஐந்து உயிர்கள் - ஐந்து பிராணன்கள், புலன்கள் - ஞாந இந்திரிய கர்ம இந்திரியங்கள், மநம் முதல் நான்கு - மநம் புத்தி சித்தம் அகங்காரம் நான்கு, ஈது இரு மெய் - ஸ்தூல சூட்சுமம் என்னும் இரண்டு சரீரங்களாம். எ-று.

இந்தஇரு வகைத்தநுவிற் கேதுவே தென வினவ, முந்தியகா ரணமதனுல் மூன்றுதநு என்றவரோ. 24

(கு-ரை) ஏது - (காரண மாகிய) காரண சரீரம், ஏது - ஏது, தநு - சரீரம், எ-று.

மநம்அறியும் துக்கசுக வரவென்றீர் அம் மநமும், வினவில்அசே தநம்அலவோ விரித் தெனக்கு விளம்பும்என. 25

(கு-ரை) துக்க சுக வரவு மநம் அறியும் என்றீர் - சுக துக்கங்கள் வருதலை மநம் அறியும் என்று (தேவரீர்) உபதேசித்தீர். எ-று.

அம்மநத்தில் ஆத்மா அபேதம்போல் தோன் றுதலால், விம்முதுக்க சுகத்தைமநம் மேவும் என்று சொன்னவரோ. 26

(கு-ரை) மநத்தில் - அந்தக் கரணத்தில், ஆத்மா - சைதந்யம், அபேதம் போல் - ஒன்று பட்டது போல, விம்மு - மிகுந்த, எ-று.



அந்தமநோ துக்கசுகம் அதனிடத்து நில்லா மல், வந்திலங்கும் ஆத்மாவை மருவியதென் சொல்லும்என. 27

(கு-ரை) அத னிடத்து - அந்த மநத்தி னிடத்து, எ-று.

வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டி யினூ, டுய்யபுன லூடுவந்தங் கொன்றுதல்போல் என்றவரோ. 28

(கு-ரை) கனலின் சூடு - அக்கியின் உஷ்ணம், மேல் வைத்த சட்டியி னூடு உய்ய புன லூடு வந்து ஒன்றுதல் போல் - நெருப்பின் மீது வைத்திருக்கும் சட்டியிடத்து ஜீவிப்பதற் காக வைத்திருக்கின்ற ஜலத்தில் வந்து பொருந்துதல் போல, எ-று.

இதனை தப்த ஜல (காய்ச்சிய நீர்) அக்நி (நெருப்பு) நியாயம் என்பர்.

சித்தாகும் ஆத்மாவும் செடம்ஆகும் சித்தமுந் தான், ஒத்தாங்கி ரண்டும்ஒன்றாய் உற்றவகை சாற்றும்என. 29

(கு-ரை) சித்து ஆகும் ஆத்மாவும் ஜடம் ஆகும் சித்தமும் இரண்டும் ஒன்று ஆய் ஒத்து உற்ற வகை சாற்றும் - சித் ரூப ஆத்மாவும் ஜட ரூப சித்தமும் இவ் இரண்டும் அபேத மாகப் பொருந்திய தன்மையைத் (தேவரீர்) கூறும். எ-று.

வல்இரும்பு கனலுடனே மருவியது போன் மநமும், ஒல்லையில்ஆத் மாவுடனே உற்றதுகாண் என்றவரோ. 30

(கு-ரை) வல் இரும்பு - வலிமை பொருந்திய அயத் துண்ட மானது, கன லுடனே - அக்நி யோடு, மருவியது - (வந்து) பொருந்தியது, மநமும் ஆத்மாவுடன் ஒல்லையில் உற்றது - (ஜட ரூப) மநமும் ஆத்மாவோடு அநாதி யாகவே பொருந்தியது. எ-று.

இதனை தப்த (காய்ச்சிய) அயப் பிண்ட (இரும்புத் துண்டம்) நியாயம் என்பர்.

உற்றதெத னல்எனவே உள்ளம்அவி வேகம் உறப், பற்றியதன் மேலும்அதன் பண்புவந்த தென்றவரோ. 31



(கு-ரை) உள்ளம் அவிவேகம் உற - மநம் (விவேக ரூப) விசாரம் இன்றியதைப் பொருந்தி யதனுல் ஆம், தன் மேலும் - ஆத்மாவின் மீதும், அதன் - மநத்தின், பண்பு - தர்மங்கள், எ-று.

அடுத்தகுணம் போமோபின் ஆத்மாவை விட் டெனவே, எடுத்தசெம்பூ நிறம்படிகத் தேறுதல் போல் என்றவரோ. 32

(கு-ரை) செம் பூ நிறம் படிகத்து எறுதல் போல் - செவ் அரத்தம் புஷ்பத்தின் செந் நிறம் (வெண்மை) ஸ்படிகத்து (அத்தியாச மாகத்) தோற்றுதல் போல. எ-று.

இதனை ரக்த (சிவப்பு) ஸ்படிக (படிகம்) நியா யம் என்பர்.

சுத்தபடி கம்போற்சொ ரூபமாய்த் தான் இருக்க, மெத்தவும்ஆ சாமலிநம் மேவியதென் சொல்லும்என. 33

(கு-ரை) சுத்த படிகம் போல் தான் சொரூ பம் ஆய் இருக்க - களங்கம் இன்றிய ஸ்படிகத்

தினைப் போல ஆத்மா சச்சிதாநந்த ஸ்வரூபம் ஆக இருக்க. எ-று.

அநாதியாம் வாசனையால் அடைந்ததா சாம லிநம், மநோபந்தம் இருக்கின்முத்தி வாராதென் றுரைத்தவரோ. 34

(கு-ரை) அநாதி ஆம் வாசனையால் ஆசா மலிநம் அடைந்தது - அநாதி ஆகிய (கரண) சம்ஸ்காரத்தினால் ஆசை யாகிய களங்கம் (ஆத்மா வினை வந்து) பொருந்தியது. எ-று.

பந்தம்எது முத்திஎது பகுத்துரைக்க வேண் டும்என்றன், சிந்தைதெ ளியஎன்று திருத்தாளி னைவணங்க. 35

(கு-ரை) திரு தாளினை - அழகிய திருவடி களை, தன் - சாரியை, எ-று.

தேகாதி தான்எனவே சேர்அபிமா நங்கள் பந்தம், ஆகாத மாநம்விடில் அரியமுத்தி என்ற வரோ. 36

(கு-ரை) தேக ஆதி - தேகம் முதலியவற்றை, தான் - ஆத்மா, மாநம் - அபிமாநம், ஆதி என்ற



தனால், பிராணன் மநம் விஞ்ஞாநம் ஆநந்தம் என்னும் நாற் கோசங்களையும் கொள்க. எ-று.

அபிமாநம் வரும்வகையும் ஆங்கதனைத் தீர் வகையும், தபியாமல் நான்அறியத் தயவாகக் கூறும்என. 37

(கு-ரை) நான் தபியாமல் அறிய - நான் தாபத்தை அடையாமல் உணர, ஆங்கு அசை நிலை. எ-று.

மறந்திடும்அஞ் ஞாநத்தால் மாநம்வந்த தஞ் ஞாநம், இறந்துவிடின் மாநமும்போம் என்ன உரை செய்தவரோ. 38

(கு-ரை) மாநம் - அபிமாநம், மாநமும் - அபி மாநமும். எ-று.

அந்தமுறை அஞ்ஞாநம் அணுகுவதும் போவ துவும், சந்தயம்இ லாதறியத் தயவாகக் கூறும் என. 39

(கு-ரை) சந்தயம் இலாது - சந்தேக (ஐய) ம் இல்லாது. எ-று.

அஞ்ஞானம் வந்தத நாதியது சொல்வதல்ல, மெய்ஞ்ஞானத் தாலேவி டும்என்று ரைத்தவ ரோ. 40

(கு-ரை) அஞ்ஞானம் அநாதி அது வந்தது சொல்வது அல்ல - அஞ்ஞானம் அநாதியாம்; அதாவது, ஆதி (உத்பத்தி) இன்றிய தாம். அஞ் ஞானம் ஆதி யாக (உத்பத்தி உடைய தாக) சொல்வ தன்று. எ-று.

இரவிஎதிர் அடுத்துவந்த இருட்போல அஞ் ஞானம், வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை யதெனவே. 41

(கு-ரை) சோதி தன்பால் அஞ்ஞானம் வர விதியோ - பிரகாச ரூபப் பிரஹ்மத்தினிடத்தில் அஞ்ஞானம் (அநாதி யாக) வருவதற்கு காரணம் உளதோ? எ-று.

அந்தஅறி வுவந்தால் அஞ்ஞானம் இல்லைஅப் பால், சந்ததமும் ஆநந்த சாகரங்காண் என்ற வரோ. 42



(கு-ரை) அந்த - ஸ்வயம் பிரகாச ஆத்மாவில், அஞ்ஞான ஆரோபம் பொருந்தாது என்னும், அறிவு - (அதிஷ்டான) ஞானம், எ-று.

வேதாந்தத் தாற்குருவால் மெய்ஞ்ஞானம் வந்தவுடன், தீதான துக்கசுகந் தீராத தே தெனவே. 43

(கு-ரை) வேதாந்தத்தால் - அத்யாத்ம சாஸ் திர சிரவணத்தினாலும் - குருவால் - (திட அப ரோக்ஷ ஞானம் உடைய) ஆச்சாரியர் உபதேசத் தினாலும், தீது ஆன - கொடிது ஆன. எ-று.

பற்றறுமோ துக்கசுகம் பரோக்ஷஞா நத்தாலே, அற்றமாம் அவ்விரண்டும் அபரோக்ஷத் தென்ற வரோ. 44

(கு-ரை) பரோக்ஷ ஞானத்தால் சுக துக்க பற்று அறுமோ அபரோக்ஷத்து அவ் இரண்டும் அற்றம் ஆம் - (சாஸ்திர ஜந்ய) பரோக்ஷ ஞானத் தால் சுக துக்கங்களின் சம்பந்தம் நீங்கமாட் டாது. அபரோக்ஷ ஞானத்தினால் சுக துக்கங்களின் சம்பந்தம் நாசம் ஆம். எ-று.

பரோக்ஷம்அப ரோக்ஷம்எது பகுத்துரைக்க வேண்டும்என்றன், திரோதமாம் புத்திநன்ருத் தெளியும்ப டிக்கெனவே. 45

(கு-ரை) என் திரோதம் ஆம் புத்தி - என்னுடைய மறைப்பு ரூபம் ஆகிய புத்தி. எ-று.

பகர்ந்தசத்த ஞாநம்ப ரோக்ஷம்அ நுபவத்தால், அகம்பிரமம் எனுஞாநம் அபரோக்ஷம் என்றவரோ. 46

(கு-ரை) சத்த ஞாநம் பரோக்ஷம் - சாஸ்திரஜந்ய ஞாநம் பரோக்ஷ ஞாநம் ஆம், அநுபவத்தால் அகம் பிரமம் எனும் ஞாநம் அபரோக்ஷம் - (விசார தியாந) அநுபூதியினுல் நான் பிரஹ்மம் என உண்டாகின்ற ஞாநம் அபரோக்ஷ ஞாநம் ஆம். எ-று.

தான்பிரமம் என்றறிந்தும் தநுவைத்தான் என்றபுத்தி, என்போக இல்லைஅதை எனக்கறியப் புகலும்என. 47

(கு-ரை) தான் - தன்னே, தான் - ஆத்மா, எ-று.



கேள்வியினுல் மநநத்தால் கிளர்ந்தயோ கங்களினுல், ஆள்பிரமத் தநுபவம்வந் ததுதீரும் என்றவரோ. 48

(கு-ரை) கேள்வியினுல் - (சட் வித லிங்க தாத்பரிய) சிரவணத்தினுலும், மநநத்தால் - மநநத்தாலும், யோகங்களினுல் - நிதித்தியாசநங்களினுலும், அது - தேகத்தில் ஆத்ம புத்தி. எ-று.

ஆதியாம் சிற்சொரூபம் ஆகாத தான்இனிமேல், சோதிமந நாதியினுல் சொரூபமா மோ எனவே. 49

(கு-ரை) ஆதி ஆம் சித் சொரூபம் ஆகாத தான் மநந ஆதியினுல் இனி மேல் சோதி சொரூபம் ஆமோ - முதன்மை யாகிய சித் சொரூப பிரஹ்மம் (முன்னர்) ஆகாத ஆத்மா சிரவண மநந நிதித்யாசநங்களால் பின்னர் பிரஹ்ம சொரூபம் ஆதல் கூடுமா? எ-று.

எப்போதும் சிந்மயந்தான் எனன்மறந்து தேடுவது, செப்புமிடற் றணியிருக்கத் தேடுதல்போல் என்றவரோ. 50

(கு-ரை) தான் - ஆத்மா, மிடற்று அணி இருக்க தேடுதல் போல் - கழுத்தில் ஆபரணம் இருக்க (மறந்து அதனை) விசாரித்து அடைதல் போல. எ-று.

இதனை கண்ட (கழுத்து) சாமீகா (பொன்) நியாயம் என்று கூறுவர்.

தேடியபின் தேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற் சொரூபம், கூடுவனோ யான்என் குறைதீரச் சொல்லும்என. 51

(கு-ரை) தேடிய பின் - (சிரவண மநந நிதித்யாசநங்களினால்) விசாரித்த பின்னர், தேக புத்தி - சரீரத்தில் (உள்ள ஆத்ம) புத்தி, தீர்ந்து போய் - நீங்கி, யான் சித் சொரூபம் கூடுவனோ - நான் சேதநப் பிரஹ்ம சொரூபத்தினை அடைவேனோ? எ-று.

வந்தவுடல் வேறாயும் வாசனையால் தான்என லால், சந்தயம்என் தற்சொரூபம் தானுதற் கென்றவரோ. 52

(கு-ரை) வந்த - (கருமத்தினால்) வந்த, உடல் - சரீரம், வேறு ஆயும் - (தனக்கு) அந்நிய மாக



இருந்தும், வாசனையால் - (ஜந்மாந்தர) சமஸ்காரத்தினால், தான் - ஆத்மா, சந்தயம் - சந்தேகம். எ-று.

தநுவைத்தான் எனும்பிரமை சத்தஞானத்தில்அறா, தநுபவமெய்ஞ் ஞானத்தால் அறும் வகையே துரையும்என. 53

(கு-ரை) தநுவை - சரீரத்தினை, தான் - ஆத்மா, பிரமை - பிராந்தி, சத்த ஞானத்தில் - சாஸ்திர ஜந்ய ஞானத்தினால், அறாது - நீங்காது. எ-று.

விளக்குவிளக் கெனும்அதனால் வெய்யஇருள் போய்விடுமோ, துளக்கம்இலா விளக்கேற்றில் தொலையும்இருள் என்றவரோ. 54

(கு-ரை) வெய்ய இருள் விளக்கு விளக்கு எனும்அதனால் போய் விடுமோ துளக்கம் இலா விளக்கு எற்றில் இருள் தொலையும் என்றவரோ - கொடிய இருட்டு தீபம் தீபம் என்று (வாக்கால்) கூறுவதால் (பயந்து) போய் விடுமா? (போகாது). அசையாத தீபத்தை எற்றி (இருள் முன்) வைக்கில் இருள் நாசம் ஆம் என உபதேசித்த பகவானே நீர். எ-று.

நெடுங்காலம் ஆர்மாவை நீங்காத அஞ்ஞானம், விடுங்காலம் எந்நாளோ மெய்ஞ்ஞானத் தால் எனவே. 55

(கு-ரை) ஆர்மாவை - ஆத்மாவை விட்டு, நெடுங் காலம் நீங்காத அஞ்ஞானம் - நீண்ட நாள் நீங்காது (கூடவே யிருந்த) அஞ்ஞானம், மெய் ஞானத்தால் விடுங் காலம் எந் நாளோ என - அபரோக்ஷ ஞானத்தினுல் எவ் வளவு காலத்தில் நீங்கும் என்று (அர்ஜ்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா விடத்தில் வணங்கி கேட்க). எ-று.

அந்தகா ரங்குகையில் ஆயிரநாள் இருந்தாலும், செந்தீபம் கண்டவுடன் தீர்வதுபோல் என்ற வரோ. 56

(கு-ரை) அந்தகாரம் குகையில் ஆயிரம் நாள் இருந்தாலும் செம் தீபம் கண்டவுடன் தீர்வது போல் - இரு ளானது (பர்வத) குகைக்குள் அநேக காலம் இருப்பினும் நல்ல விளக்கை கண்ட மாத்திரத்தில் (தாமதம் இன்றி) நீங்கிப் போவது போல. எ-று.



இதனை அந்தகார (இருள்) தீப (விளக்கு) தர்சந நியாயம் என்பர்.

கருமயோ கந்தவமே காரணமாய் நீங்காமல், அருமையா ஞானம்வந்தோ அஞ்ஞானம் போம் எனவே. 57

(கு-ரை) அருமை ஆம் ஞானம் - அபரோக்ஷ ஞானம். எ-று.

குத்துவெட்டும் படைகளிறுற் கூடுமோ இருடுரக்க, உத்தமமாம் ரவிஉதித்தால் ஓடும் இருள் என்றவரோ. 58

(கு-ரை) இருள் தூக்க குத்து வெட்டும் படைகளினுல் கூடுமோ - இருளைப் போக்க வாளாலும் பாணத்தினுலும் முடியுமா?, ரவி உதித்தால் இருள் ஓடும் - சூரிய உதயம் ஆனுல் இருள் விரைந்து கெடும். எ-று.

இதனை சூரிய சந்நிதியில் அந்தகார நாச நியாயம் என்பர்.

அஞ்ஞாந விருடுரக்க அறியாத நல்லகன்மம், மெய்ஞ்ஞாலந் தனைப்பரிக்கும் விதம்எவ்வா றெனவினவ. 59

(கு-ரை) கன்மம் ஞாலந்தனை பரிக்கும் விதம் எவ்வாறு - (நித்தியாதி) கர்மங்கள் பிரபஞ்சத் தினைத் திதி (காத்தல்) செய்தல் தன்மை எங்ஙனம் கூடும்? எ-று.

இந்திரசா லம்போல இவ்வுலகை நம்மிடத் தில், தந்திரமாய்த் தோற்றுவித்தோம் சத்யம் அல என்றவரோ. 60

(கு-ரை) இந்திர சாலம் போல - இந்திர ஜாலக்காரனது (வித்தையாற் றோன்றும் பொருள்) போல, சத்யம் அல - (பிரபஞ்சம்) உண்மை அல்ல. எ-று.

மித்தைஎனுஞ் சகத்துநின்பால் விளங்குமோ எனவினவ, சுத்திதனி லேரஜதம் தோன்றுதல் போல் என்றவரோ. 61

(கு-ரை) நின்பால் - (சத்திய ஸ்வரூப) உன்னிடத்தில், மித்தை எனும் சகத்து விளங்குமோ - பொய்யாகிய பிரபஞ்சம் தோன்றுமா?, சுத்திதனிலே ரஜதம் தோன்றுதல் போல் - (வியாவகாரிக சத்திய) கிளிஞ்சிலினிடத்தில் (பிராதிபாசிக மித்தியா) வெள்ளி தோற்றுவது போல. எ-று.



இதனை சுக்திகா (கிளிஞ்சில்) ரஜத (வெள்ளி) நியாயம் என்பர்.

அயல்வெள்ளி சுத்தியின்மேல் ஆரோபி தங் கூடும், இயல்உள்ள சகமுமுன்வே றிருந்ததும் உண் டோஎனவே. 62

(கு-ரை) சுத்தியின் மேல் அயல் வெள்ளி ஆரோபிதம் கூடும் முன் வேறு இயல் உள்ள சகமும் இருந்ததும் உண்டோ - கிளிஞ்சிலினிடத்தில் அந்நிய (வியாவகாரிக) வெள்ளியின் அத்தியாசம் பொருந்தும். பூர்வம் அந்நிய மாக உண்மையா யிருக்கும் பிரபஞ்சம் (ஒன்று) இருந்ததா? எ-று.

மநமயக்கம் பிடிக்கில்இல்லா வத்துவுந்தோன் றிடும்அதுவோ, கநவில்விண்ணில் தான்பறக்கக் கண்டதுபோல் என்றவரோ. 63

(கு-ரை) கநவில் தான் விண்ணில் பறக்கக் கண்டது போல் - ஸ்வப்ந அவத்தையில் தான் ஆகாயத்தில் பறப்ப தாகப் பார்ப்பது போல். எ-று.

இது சத்ய வஸ்து செய்ய சம்ஸ்கார காரணங்கள் இன்றியும் பிராந்தி உண்டாம் என்று கூறுவது.

கனவுபோற்ப்ர பஞ்சமென்றீர் கண்விழித்தால் கனவுபொய்யாம், வினவுசகம் திநமுமெய்யா விளங்குவதென் சொல்லும்என. 64

(கு-ரை) கண் விழித்தால் - நனவை அடைந்தால், கனவு பொய் யாம் - சொப்பநமும் (சொப்பநப் பொருள்களும்) மித்தை யாம், திநமும் - ஒவ் வொரு நாளும், சகம் மெய் ஆக விளங்குவது - உலகம் உண்மை யாக (எல்லாருக்கும்) தோன்றுவது. எ-று.

மெய்ஆக விளங்குவது மெய்ஞ்ஞாநம் வரும் அளவும், பொய்யாம்பின் கனவதுபோல் போதம் வரில் என்றவரோ. 65

(கு-ரை) மெய் ஞாநம் வரும் அளவும் மெய் ஆக விளங்குவது - அபரோக்ஷ ஞாநம் வரும் வரை (பிரபஞ்சம்) உண்மை யாக விளங்குவ தாம், போதம் வரில் பின் கனவது போல் பொய் ஆம்- (அபரோக்ஷ) ஞாநம் வந்த பின் சொப்பநமும், (சொப்பநப் பொருளும்), போல மித்தை ஆம். எ-று.



முன்புகண்ட கநவுபொய்யாம் முழிசாக்ரம் போலஎன்றீர், பின்புமுத்தித் தசைஅடைந்தும் ப்ரபஞ்சநிற்ப தேதெனவே. 66

(கு-ரை) முழி சாக்கிரம் - விழித்துக்கொள்ளுகின்ற சாக்கிர அவஸ்தையில், முன்பு கண்ட கநவு பொய் ஆம் போல - பூர்வம் பார்த்த (சொப்பநப் பொருள்களும்) சொப்பநமும் மித்தை யாக இருப்பது போல. எ-று.

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வ தல்லால், பரந்தசகம் காரியத்திற் பயன் படா தென்றவரோ. 67

(கு-ரை) தெத்த படம் - கொளுத்திய வேட்டி, காரியத்தின் - (ஜநந மரண ரூப சம்சாரத்தைக் கொடுப்ப தாகிய) காரியத்தினல். எ-று.

இதனை தக்த (கொளுத்திய) பட (வேட்டி) நியாயம் என்பர்.

கன்மவினை அஞ்ஞாநம் கடந்தும்அதன் காரிய மாம், புன்மையுறு மெய்உடனே போகாத தே தெனவே. 68

(கு-ரை) அதன் - அஞ்ஞாந கர்மங்களின், மெய் - (தூல) சரீரம், உடனே - (அபரோக்ஷ ஞாநம் வந்த) உத்தா க்ஷணத்திலே. எ-று.

வெட்டவிழும் மரம்பசந்து விளங்குதல்போல் சிலகாலம், நட்டகன்மம் மாய்ந்தும்அங்கம் நடித் திடுங்காண் என்றவரோ. 69

(கு-ரை) வெட்ட விழும் மரம் சில காலம் பசந்து விளங்குதல் போல் - வெட்டி வீழ்த்திய மரம் சில நாள் பச்சை யாகத் தோன்றுவது போல, நட்ட கன்மம் மாய்ந்தும் அங்கம் சில காலம் நடித்திடும் - சஞ்சித ஆகாமிய கர்மங்கள் நாசம் ஆகியும், பிராரப்த கர்மம் இருக்கும் வரை சரீரம் தொழில் செய்யும். எ-று.

இதனை தரு (மரம்) சேத (வெட்ட) ஆர்த்ர (ஈரத் தன்மை) நியாயம் என்பர்.

சென்மம்போய் முத்தியினைச் சேரச்சி லர் இருக்கத், தொன்மைஆங் மாபலவோ சொரூபம் பகரும்என. 70



(கு-ரை) சிலர் சென்மம் போய் முத்தியினை சேர - சில பேர்கள் பிறப்பு நீங்கி மோக்ஷத்தினை அடையவும், இருக்க - (சில பேர் மோக்ஷம் அடை யாமல் பந்தம் உடையவ ராக) இருக்கவும். எ-று.

பிரமம்என்றும் ஈசன்என்றும் பெருகுபல சீவர் என்றும், உரைமயக்கம் அலதாங்மா ஒருவனே என்றவரோ. 71

(கு-ரை) உரை - கூறுவது, மயக்கம் - பிராந் தியே, அலது - அன்றி, ஆங்மா - (அதிஷ்டாந) ஆத்மா, எ-று.

ஏகந்தான் ஆங்மா எனும்வகையே மெய்யா னால், ஆகந்தோ றும்பலவாய் அமர்ந்ததென்னே சொல்லும்என. 72

(கு-ரை) ஆகம் தோறும் - சரீரம் தோறும். எ-று.

பலகடத்தில் சலத்தூடு பாநுவிம்பம் தோன்று தல்போல், தொலேவில்புத்தி தொறும்ஆங்மாத் தோன்றுதல்காண் என்றவரோ. 73

(கு-ரை) பல கடத்தில் சலத்தூடு பாநு விம்பம் தோன்றுதல் போல் - அநேக இடங்களில் உள்ள நீரினிடத்து (ஒரே) சூரியன் (நாநா) பிரதி பிம்பமாகத் தோன்றுவதுபோல், புத்தி தொறும் ஆன்மா தோன்றுதல் - அந்தக் கரணம் தோறும் (ஒரே) ஆத்மா - (நாநா ஆத்மா வாகப் பிரதி விம்பித்துத்) தோன்றுகின்றது, எ-று.

இதனை பிம்பப் பிரதிபிம்ப (நிழல்) நியாயம் என்பர். பிம்பம், பிரமமும், ஆகாய சூரியனும், பிரதிபிம்பம், ஜல சூரியனும், ஜீவ ஆத்மாவும் ஆகும்.

ஆதித்தன் போல்ஆன்மா அளவில்புத்தி தொறுந் தோன்றில், சாதிக்கும் முத்திஎவர் தமக்கதனைச் சாற்றும்என. 74

(கு-ரை) ஆதித்தன் போல் - சூரியப் (பிரதி விம்பம்) போல, அளவில் புத்தி தொறும் ஆன்மா தோன்றில் - அநேக அந்தக் கரணங்களில் ஆத்மா (பிரதிவிம்பித்துத்) தோன்றுமானல், முத்தி எவர் தமக்கு - மோக்ஷம் யாவருக்கு, அந்தக் கரணத்திற்கா? ஆத்மாவிற்கா?, எ-று.



பந்தமுத்தி தானும்அந்தப் பாந்தபுத்தி தனக் கேயாம், அந்தவிம்பம் தனக்கிலைஎன் றறிவுவாச் சொன்னவரோ. 75

(கு-ரை) அந்த பாந்த புத்திதனக்கு பந்தம் முத்தி தானும் ஆம் - அந்த விரிந்த அந்தக் கரணத்திற்கே பந்தமும் மோக்ஷமும் ஆம், விம்பம் தனக்கு - விம்ப ரூப பிரஹ்மத்திற்கு, இலை - (பந்தமும் மோக்ஷமும்) இல்லை, எ-று.

பரம்ஏகம் ஆயும்அதில் பலசீவர் ஏதெனவே, ஒருகடலில் பலகுமிழி உதிப்பதுபோல் என்ற வரோ. 76

(கு-ரை) ஒரு கடலில் பல குமிழி உதிப்பது போல் - ஒரு சமுத்திரத்தில் நாநா குமிழிகள் உண்டாவன போல, (ஒரே பிரஹ்மத்தில் நாநா ஜீவர்கள் தோற்றுகின்றனர்), எ-று.

இதனை சமுத்திர (கடல்) புத்புத (குமிழி) நியாயம் என்பர்.

சீவனது தான்என்றும் சேரும்பி ரமம்என்றும்,
ஆவதுவோ பேர்இன்பம் ஆங்கதெனக் கோதும்
என. 77

(கு-ரை) தான் சீவனது என்றும் சேரும் பிரமம் என்றும் ஆவதுவோ பேரின்பம் - தான் ஜீவன் எனவும் (தன்னால்) அடையப்படுவது பிரமம் எனவும் உண்டாம் தாச தாசிய (ஆண்டான் அடிமைப்) பேத ஞானத்தினால் ஜநிப்பதோ பிரஹ்மாநந்தம், எ-று.

ஏகம்பி ரமம்இ ரண்டிலைநீ வேறும்அல, சோகம்
உறும் பேதம்அறில் தோன்றும்இன்பம் என்ற
வரோ. 78

(கு-ரை) பிரமம் ஏகம் இரண்டு இலை நீ உம் வேறு அல - பிரஹ்மம் ஒன்றே, இரண்டாவது (த்வைதப் பொருள்) இல்லை. நீயும் (பிரஹ்மத்திற்கு) அந்யம் இல்லை, எ-று.

சீவபே தம்போமோ சித்தொன்றா மோஎன
வே, ஆவல்மநம் அறுஞ்சுழுத்தி அவத்தையில்
பார் என்றவரோ. 79



(கு-ரை) மநம் அறும் சுழுத்தி அவத்தையில் பார் - அந்தக்கரணம் லீநமாகியிருக்கிற சுழுத்தி அவஸ்தையில் (சீவ அபேதத்தினை) பார்ப்பாயாக, எ-று.

பேதம்அல இவ்வுலகம் பிரமமயம் என்றறிந்
தும், பூதமய மாய்த்தோற்றல் போகாத தே
தெனவே. 80

(கு-ரை) அறிந்தும் - உணர்ந்த பின்னரும், பூத மயம் ஆய் தோற்றல் - பஞ்ச பூத சொரூபமாகவே தோற்றுதல். எ-று.

கானலைநீர் என்றோடிக் கண்டவர்க்குத் தீர்ந்த
பின்னும், வான்உலவு நீர்ஆகி வயங்குதல்போல்
என்றவரோ. 81

(கு-ரை) கானலை நீர் என்று ஓடி கண்டவர்க்கு - சூரிய வெப்பத்தை ஜலம் என்று கருதி (தாக நிவிர்த்திக்காக) சென்று (ஜலம் இல்லை கானல் என்று) அபரோக்ஷமாக அறிந்தவர்க்கு, தீர்ந்த பின்னும் - (ஜலப் பிராந்தி) நீங்கிய பின்னரும், வான் உலவு நீர் ஆகி வயங்குதல் போல் -

ஆகாயத்தை அளாவிய ஜலப் பிரவாகமாகக் காணப்படுவது போல், (பிரபஞ்சத்தை பிஹ்ம ரூப மாக அபரோக்ஷ மாக அறிந்த பின்னரும் பஞ்ச பூத ஸ்வரூப மாகவே தோன்றும்),

இதனை, மரு (பாலை வனம்) மரீசிகா - (கிரணம்) நியாயம் என்றும், மிருக (மான்) திருஷ்ணிகா (ஜலம் - கானல்) நியாயம் என்றும் கூறுவர். எ-று.

அறிவானும் நல்அறிவும் அறியப்ப டும்பொரு ளும், பிறிவாய்மூன் றுயிருத்தல் பேதம்அல வோஎனவே. 82

(கு-ரை) அறிவானும் நல் அறிவும் அறியப் படும் பொருளும் மூன்று ஆய் பிறிவு ஆய் இருத் தல் பேதம் அலவோ என - திருஷ்டா தர்சந திரிசியம் - ஞாதா ஞானம் ஞேயம் - காண்பான் காட்சி காணப்படும் பொருள் - என்று மூன்று பிரி வாக இருக்குதல் பேதம் அல்லவா என்று (அர்ஜுனன் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா இடத் தில் திரு அடியில் வணங்கிக்) கேட்க, எ-று.



சொப்பநத்தில் தனித்தொருவன் தோற்றம் வே றில்லைஅங்கே, கற்பனைஆம் பொருள்அறிவு காண்பவன்போல் என்றவரோ. 83

(கு-ரை) தனித்து ஒருவன் சொப்பநத்தில் அங்கு வேறு தோற்றம் இல்லை கற்பனை ஆம் பொருள் அறிவு காண்பவன் போல் - தனிமை யாகப் படுத்து இருக்கும் ஒருவனது சொப்பந அவஸ்தையில், அவ் விடத்து (அவனுக்கு அந்நிய மாக) வேறு பொருள்களின் விளக்கம் இல்லை. (அங்ஙனம் இருந்தும்) பொய் யாகிய திரிசியம் திருக்கு திருஷ்டா (என்று பேத மாகப் பார்ப்பது) போல, எ-று.

கற்பனைஆம் பேதங்கள் காணுமல் போம் வகையை, விற்பநமாம் நான்அறிய விளம்பும் என வேவணங்க. 84

(கு-ரை) கற்பனை ஆம் பேதங்கள் - பொய் யாகிய திருஷ்டா திருக் திரிசிய ரூப பேதங்கள், எ-று.

துரியம்ஆம் யோகத்தால் தூயமநம் லயமானல், அரியமூ வகைவிகற்பம் அழியும்என்று சொன்ன வரோ. 85

(கு-ரை) துரியம் ஆம் யோகத்தால் - நான் காவது ஆகிய நிதித்யாசநத்தினல், தூய மநம் லயம் ஆனல் அரிய மூ வகை விகற்பம் அழியும் - பரிசுத்த மநம் உள் நோக்கம் அடையில் ஞாதா ஞாநம் ஞேயம் என விளங்கும் விகற்பம் நாசம் ஆம், எ-று.

சிறந்திருக்கும் ஆன்மாவும் செகம்எல்லாம் நிறைந்திருந்தும், மறைந்தெனக்குத் தோன்றாத வகைஎது சொல்லும்என. 86

(கு-ரை) செகம் எல்லாம் நிறைந்திருந்தும் - பிரபஞ்சம் பூரா வியாபித்திருந்தும், எ-று.

சத்துச்சித்தா நந்தந்தாம் மூன்றும்அ தனுடனே, ஒத்துற்று நாமவுருவஞ்ச கம்ஆகி. 87

(கு-ரை) சத்து சித்து ஆநந்தம் நாம உருவம் சகம் ஆகி - சத் சித் ஆநந்தம் நாம ரூபம் (ஆக ஐந்தும் சேர்ந்து) உலகம் ஆகி, எ-று.



இருக்கையினில் தோற்று திவைமூன்றும் பிரமம்என, மரிக்கில்வரும் பின்இரண்டும் மறி சகம்என் றுரைத்தவரோ. 88

(கு-ரை) இருக்கையினில் - இருக்கின்றபடியால், தோற்றுது - (ஆத்மா உனக்கு) விளங்காது, இவை மூன்றும் பிரமம் பின் இரண்டும் மறி சகம் என மரிக்கில் வரும் - சச்சிதாநந்தம் மூன்றும் பிரஹ்ம ஸ்வரூபம் ஆகும். பின்னர் கூறிய நாம ரூபங்கள் அழிகின்ற உலக ஸ்வரூபம் ஆகும் என்று நினைத்துப் பார்க்கில் (ஆத்மா) தோன்றும். எ-று.

அறிந்துகொண்ஞா நத்தாலே ஆன்மாவை என்றுரைத்தீர், சிறந்தொளிரும் ஆன்மாவும் திருசியமா மோஎனவே. 89

(கு-ரை) ஆன்மாவை ஞாநத்தால் அறிந்து கொள் என்று உரைத்தீர், சிறந்து ஒளிரும் ஆன்மாவும் திருசியம் ஆமோ என - ஆத்மாவை ஞாநத்தினல் அறிந்து கொள்வாயாக என்று கூறினீர், சச்சிதாநந்தச் சிறப் புற்று விளங்கும் ஆத்மாவும் திருசியம் ஆகுமா, எ-று.

முந்தியஞா நத்தாலே முதிரும்அஞ்ஞா நந் தூரக்கில், சிந்தையில்ஆந் மாச்சுயமாய்த் திகழும் என்று சொன்னவரோ. 90

(கு-ரை) முந்திய ஞாநத்தால் முதிரும் அஞ் ஞாநம் தூரக்கில் சிந்தையில் ஆந்மா சுயம் ஆய் திகழும் என்று சொன்னவரோ - அபரோக்ஷ ஞாநத்தினுல் கடிந அஞ்ஞாநத்தை நிவிர்த்தி செய்யில் மநதில் ஆத்மா சச்சிதாநந்த ஸ்வரூபம் ஆகத் தான்ஆகவே விளங்கும். எ-று.

இனியமுத்திச் சுகம்இருப்ப தெப்படிஎன் றே வினவ, அநுபவத்தில் அறிவிடயா நந்தம்போல் என்றவரோ. 91

(கு-ரை) இனிய முத்தி சுகம் இருப்பது எப்படி என்று வினவ விடய ஆநந்தம் போல் அநுபவத்தில் அறி - விஷயாநந்தம் போல அநு பவம் ஆக உணர்ந்து கொள்வா யாக. எ-று.

மநலயம்வந் தவர்அலது மற்றிலரோ முத்தர் எனச், சநகனைப்போல் சீவன்முத்தர் தாமும் உளர் என்றவரோ. 92



(கு-ரை) மநம் லயம் வந்தவர் அலது மற்று முத்தர் இலரோ என சநகனை போல் சீவன் முத்தர் தாமும் உளர் - மநம் லயம் அடைந்து சமாகிதர் ஆய் இருப்பவர் மாத்திரம் மோக்ஷம் அடைந்தவர் ) அன்றி, சமாதி யின்றி யிருப்பவர் முத்தர் அல்லரோ என கேட்க, சநக ராஜாவை போல் வியுத்தாந தசையில் வியவகாரியா யிருக் கும் முத்தர்களும் இருக்கின்றனர், எ-று.

சீவன்முத்தி அடைந்தோர்கள் செயலும்அவர் தங்குணமும், நாஉரைக்கும் வாசகமும் நான் அறியச் சொல்லும்என. 93

(கு-ரை) செயல் குணமும் வாசகமும் - விவகாரமும் குணமும் வசநப் பிரகாரமும், "எவ் வாறு சொல்வது எவ் வாறு பேசுவான் எவ் வாறு நடப்பான்" எனப் பகவற் கீதை 2-வது அத்யா யம் 54-வது சுலோகத்தில் அர்ஜ்ஜுநன் வினு ஆம். தமிழ் செய்யுளில் 48-வது கவி ஆம். எ-று.

வருங்கருவு பிறப்பினெடு வளர்தல்பருத் தல் குறைதல், ஒருங்கலுமெய்க் கென்றதனை ஒறுத் திருப்பார் என்றவரோ. 94

(கு-ரை) கருவு வரும் - (மாதாவின் கர்ப்பாசயத்தில்) கர்ப்பம்ஆக உண்டாதலும், பிறப்பு - ஜநித்தலும், வளர்தல் - விருத்தி ஆதலும், பருத்தல் - தூலம் ஆதலும், குறைதல் - சுருங்குதலும், ஒருங்கலும் - நாசம் அடைதலும், (ஆகிய ஷட்பாவ விகாரங்களும்), மெய்க்கு - (தூல) சரீரத்திற்கு, எ-று.

தமிழ் பகவற் கீதை 2-வது அத்யாயம் 23 கவியின் கருத் தாம்.

பார்ப்பதுவும் கேட்பதுவும் பகர்வதுவும் செல்வதுவும், ஏற்பதுவும் காரணதன்மம் எனத் துணிவார் என்றவரோ. 95

(கு-ரை) பார்ப்பதுவும் - (கண்ணால் உருவத்தினை) பார்ப்பதுவும், கேட்பதுவும் - (காதால் சத்தத்தை) கேட்பதுவும், பகர்வதும் - (வாக்கால் நாமத்தினை) கூறுவதும், செல்வதுவும் - (காலால்) நடப்பதுவும், ஏற்பதுவும் - (கையால் ஒன்றை) வாங்குவதுவும், காரண தன்மம் - (ஆகிய யாவும்) ஞான இந்திரிய கர்ம இந்திரியங்களினது தர்மம், என - என்று, துணிவார் - (ஜீவந்



முத்தர்) நிச்சயம் செய்வார். இது வசநப் பிரகாரம். எ-று.

தமிழ் பகவற் கீதை 3-வது அத்தியாயம் 15-வது கவியின் கருத் தாம்.

பசிதாகம் உயிர்க்கெனவே பயந்துக்கம் சுகங் காமம், வசிகோபம் மதிக்கெனவே மகிழ்ந் திருப்பார் என்றவரோ. 96

(கு-ரை) பசி தாகம் உயிர்க்கு என பயம் துக்கம் சுகம் காமம் வசி கோபம் மதிக்கு என மகிழ்ந்து இருப்பார் - பசியும் தாகமும் பிராணனுக்கு என்றும், பயமும் துக்கமும் சுகமும் ஆசையும் கோபமும் அந்தக் காரணத்திற்கு என்றும், கருதி (ஜீவந் முத்தர்) சந்தோஷ மாக இருப்பார், எ-று.

இது குணம் உரைத்தல்.

வீடுந்தா ரமும்உறவு மேவிஎன்றும் இருந் தாலும், நீடுந்தா மரையிலைநீர் நிகர்ஆவார் என்றவரோ. 97

(கு-ரை) வீடும் தாரமும் உறவும் மேவி என்றும் இருந்தாலும் நீடும் தாமரை இலை நீர் நிகர் ஆவார் - கிரகத்தோடும் மனைவியோடும் சுற்றத்தாரோடும், விரிந்த தாமரை யிலையினது ஜலத்திற்குச் சமான மாகச் (சம்பந்தம் இன்றி இருப்பவர்) ஆவர், எ-று.

இதனை, கமல பத்ர (தாமரை யிலை) உதக (நீர்) நியாயம் என்பர்.

இது செயல் உரைத்தல்.

பற்றிடுங்கா யமுந்தானும் பன்னாள்ஒன்
ருயினும்பின், உற்றபுளி யம்பழமும் ஓடும்
ஒப்பார் என்றவரோ. 98

(கு-ரை) பற்றிடும் காயமும் தானும் பல் நாள் ஒன்ருயினும் பின் உற்ற புளியம் பழமும் ஓடும் ஒப்பார் - (கருமாதீந மாகப்) பொருந்தி யிருக்கின்ற சரீரமும் ஆத்மாவும் பல நாள் ஐக்கிய மாய் இருப்பினும் (ஞாநம் வந்த) பின்னர் பொருந்திய புளியம் பழத்தினையும் (அதன்) தோட்டினையும் போலச் (சம்பந்தம் இன்றி இருப்பவர் ஆவார் ஜீவன் முத்தர்), எ-று.



இதனை, திந்திரிணி பல (புளியம் பழ) சர்ம (தோல்) நியாயம் என்பர்.

இது செயல் உரைத்தல்.

கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞ்
ஞாநம்வந்தோர், சேறும்பிள்ளைப் பூச்சியும்
போல் திரிவார்காண் என்றவரோ. 99

(கு-ரை) மெய் ஞாநம் வந்தோர் கூறும் உலக இயற்கையுடன் கூடினும் சேறும் பிள்ளைப் பூச்சியும் போல் திரிவார் - அபரோக்ஷ ஞாநம் வந்த பெரியோர் (அசுத்தம் துக்கம் அநித்யம் என்று) சொல்லாநின்ற பிரபஞ்ச சுபாவத்தோடு பொருந்தி யிருப்பினும் சேற்றினையும் பிள்ளைப் பூச்சியினையும் போல (பற்றின்றி) சஞ்சரிப்பர், எ-று.

இதனை, பங்க (சேறு) கீடக (பிள்ளைப் பூச்சி - புழு) நியாயம் என்பர்.

இது செயல் உரைத்தல்.

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரில்
கிடப்பதுபோல், மதியோடு கூடினும்பின் மயங்
கார்காண் என்றவரோ. 100

(கு-ரை) ததி ஊடு கடைந்த வெண்ணெய் மோரில் கிடப்பது போல் பின் மதியோடு கூடினும் மயங்கார் - தைரினிடத்தில் (ஒன்று பட் டிருந்து) மதநஞ் செய்த நவநீதம் மோரி டத்துச் (சம்பந்தம் மாத்திர மாகக்) கிடப்பது போல, (ஞானம் வந்த) பின்னர் (ஞானிகள்) அந்தக் காரணத்தோடு சேரினும் சம்பந்த மாத்திர மாக இருந்து (முத் தாப மயக்கத்தினை) அடையார்கள், எ-று.

இதனை, தக்ர (மோர்) நவநீத (வெண்ணெய்) நியாயம் என்பர்.

அருச்சுநன்தன் பொருட்டாக அனைவருக்கும்
ஞானம்வரப், பொருந்தியதே சிகவடிவாம்
புண்ணியரே கண்வளரீர். 101

(கு-ரை) அருச்சுநன் பொருட்டு ஆக - அர்ஜ்ஜுநனை நிமித்தம் ஆக - தேசிக வடிவு ஆம் புண்ணியரே - ஆசாரிய ரூபம் ஆக எழுந்தருளி யிருந்து உபதேசம் செய்த புண்ணிய ஸ்வரூபரே, கண் வளரீர் - (கண் விருத்தியாதல்) நித்திரை செய்வீர், எ-று.



ஆயர்குல மாதர் அளவிலோ ரைப்புணர்ந்தும்,
தூயபதின் ஆறு யிரவருடன் தோய்ந்திருந்தும். 102

(கு-ரை) ஆயர் குலம் மாதர் அளவிலோரை புணர்ந்தும் தூய பதின் ஆறுயிரவர் உடன் தோய்ந்திருந்தும் - கோபிகா ஸதிரீகள் அநேக ரோடு கூடி சுகித்தும், பதின் ஆறு ஆயிரம் ராஜ ஸ்திரீகளோடு சுகித்தும், எ-று.

பரமமுநி வர்முன்னே பரிச்சித்தைத் தீண்டி
அன்று, பிரமசரி யஞ்செலுத்தும் பேரொளியே
கண்வளரீர். 103

(கு-ரை) பரம முநிவர் முன்னே பரிச்சித்தை தீண்டி அன்று பிரமசரியம் செலுத்தும் பேர் ஒளியே கண் வளரீர் - மேலான ஞானிகள் சந்நதியில் பரிச்சித்து மஹா ராஜாவை (கையால்) தொட்டு அக் காலத்தில் பிரமசரிய ஆசிரமத்தினை நடாத்திய பூரணப் பிரகாச ஸ்வரூபரே நித்திரை செய்வீர், எ-று.

ஆ[illegible] லம்விசயற் காதிமறை யின்பொருளை,
ஓதியு[illegible]ணர்த்தும்இந்த உண்மைதனை - காதல்






உற்றுக், கற்ருேருங் கேட்டோரும் காசியினில்
வாழ்ந்துமுத்தி, பெற்ருேர்கள் முத்தர்பெறும்
பேறு. 104

(கு-ரை) ஆதி மூலம் - கிருஷ்ண பரமாத்மா, விசயற்கு - அர்ஜ்ஜுநனுக்கு, இந்த உண்மை தனை - உண்மையான கீதா சாரத் தாலாட்டை, காதல் உற்று - விருப்பத்தோடு, கற்ருேரும் கேட்டோரும் - படித்தவரும் சிரவணம் செய்த வரும், காசியினில் - பூமியில், வாழ்ந்து - (புத்திர பௌத்திர சம்பத்தோடு நீண்ட நாள் ஆயுளோடு) வாழ்ந்து, முத்தர் பெறும் பேறு முத்தி பெற்ருேர்கள் - முத்தர்கள் பெற்ற பிரயோசந மாகிய மோக்ஷத்தினை அடைந்தவர் ஆவார்கள், எ-று.

**ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்**
**இயற்றிய,**

**கீதா சாரத் தாலாட்டுக் குறிப் புரை**
**முற்றுப் பெற்றது.**